Regd. No. TN/MS (C) 24 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**மகிழ்ச்சி**

பாடுபடுகிற உழவர்களுக்கு நிலம் சொந்தமானால், அவர்கள் நிமிர்ந்து நடப்பார்கள். அவர்கள் நெஞ்சத்தில் மகிழ்ச்சி ஏற்படும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**பகுத்தறிவு**

பகுத்தறிவு மூலம் மனிதனின் ஆயுள் வளர்ந்ததோடு, மனிதனின் சாவு எண்ணிக்கையும் மிகவும் குறைந்து விட்டது.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 2 - 11 - 82 செவ்வாய் வெளியூர் 3 - 11 - 82 புதன் இதழ்: 17

### பூண்டி, ரெட்ஹில்ஸ் பகுதியில் பெருமழை:

# தமிழகம் முழுவதும் பரவலாக பருவ மழை

**சென்னை, நவ. 2-தமிழகம் முழுவதிலும் பரவலாக பருவ மழை பெய்யத் தொடங்கி உள்ளது. சென்னை நகருக்கு குடிநீர் வழங்கும் பகுதிகளில் பெருமழை பெய்துள்ளது.**

வடகிழக்குப் பருவ மழை தமிழகத்தில் பரவலாக பெய்யத்தொடங்கியுள்ளது.

கடும் வறட்சி நிலையைப் போக்க வடகிழக்குப் பருவமழை பெய்யத் தொடங்கி உள்ளது.

வங்கக்கடலில் உருவாகி உள்ள குறைந்தபட்ச காற்றழுத்த மண்டலத்தால் மழை பெய்து வருகிறது.

சென்னை நகரிலும், கடற்கரை ஓரங்களிலும் இடியுடன் கூடிய பலத்த காற்றுடன் மழை விட்டு விட்டு தொடர்ந்து பெய்யும். இது அடுத்த 48 மணி நேரத்திற்கு தொடரும் என்று நுங்கம்பாக்கம் வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்துள்ளது.

வங்கக்கடலில் உருவாகி இருப்பது குறைந்தபட்ச காற்றழுத்த மண்டலம் தான்; புயல் அல்ல என்றும் அதிகாரி ஒருவர் கூறினார்.

இன்று காலை வரை தமிழகத்தில் பெய்தமழையில் ஸ்ரீபெரும்புதூரில்தான் அதிக மழை அளவு உள்ளது. ஸ்ரீபெரும்புதூரில் 71.2 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது.

நேற்று தொடங்கி உள்ள மழை புதுவை உட்பட தமிழகம் முழுவதும் பரவலாக பெய்துள்ளதாக நுங்கம்பாக்கம் வானிலை ஆராய்ச்சி நிலைய தகவல் கூறுகிறது.

சென்னையிலும் நல்ல மழை பெய்துள்ளது. மீனம்பாக்கத்தில் 37.7. மில்லி மீட்டரும், நுங்கம்பாக்கத்தில் 31,3 மில்லி மீட்டரும் பெய்ததாக பதிவாகி உள்ளது.

புதுவையில் 46.1 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது.

சென்னைக்கு குடிநீர் வழங்கும் பகுதியான பூண்டியில் 67,2. மில்லி மீட்டர் மழை செய்துள்ளது. தாரமப்பாக்கத்தில் 45 மில்லி மீட்டரும், ரெட்ஹில்ஸில் 44 மில்லி மீட்டரும் செம்பரம்பாக்கத்தில் 35.6 மில்லி மீட்டரும், சோழவரத்தில் 32 மில்லி மீட்டரும் மழை பெய்துள்ளது.

### பருவமழை தீவிரம்

சென்னையை அடுத்த திருவள்ளூரில் 47,6 மில்லி மீட்டர் பெய்ததாக பதிவாகி இருக்கிறது.

சென்னைக்கு குடிநீர் வழங்கும் ரெட்ஹில்ஸ் பகுதிகளில் நல்ல மழை பெய்து இருப்பதால் ரெட்ஹில்ஸ் ஏரி, பூண்டி, சோழவரம் ஏரிகளில் தண்ணீர் மட்டம் உயரக்கூடும்.

தஞ்சை மாவட்டத்திலும் பரவலாக நேற்று இரவு மழை பெய்துள்ளது.

இந்த மழை பரவலாக பெய்து வருவதால் பருவ மழை தீவிரம் அடைந்து வருவதாக கருதப்படுகிறது.




**கேள்வி:**

ஒரு கட்சியின் தலைமை மூளையாகவும், தொண்டர்கள் இதயத்துடிப்பாகவும் இருக்க வேண்டும் என்று கரிகாலன் கூறுகிறாரே?

**பதில்:**

திண்டுக்கல் முதல் பெரியகுளம் வரை நடந்த தேர்தல்களைப் பார்த்தால் தி. மு. க.வின் 'இதயத்துடிப்பு' அடங்கி வருகிறது. காரணம், அந்தக் கட்சியின் தலைமை கரிகாலன் சொல்வதுபோல் இல்லாததுதான்.

**கேள்வி:**

கோபுரத்தில் இருக்கும் இலை தனக்கு எட்டவில்லை என்று நாக்கை நீட்டியதாக கரிகாலன் கூறுவது பற்றி...

**பதில்:**

தன்னை எச்சில் இலை என்று ஒத்துக்கொண்டதற்கு நன்றி.

**கேள்வி:**

அண்ணாவை, 'அறிஞர் அண்ணா' என்று தீபம் பார்த்தசாரதி கூறியதாக 'குமுதம்' வெளியிட்டது. ஆனால் அதை மறுத்து ''நான் அறிஞர் அண்ணா'' என்று கூறவில்லை. ''திரு. சி. என். அண்ணாதுரை'' என்று தான் சொன்னேன் என்று பார்த்தசாரதி கூறியிருக்கிறாரே?

**பதில்:**

கஸ்தூரிவாசனை, மனிதர்களுக்குத் தான் புரியும். இந்தக் கேள்விக்கு அண்ணாவின் மொழியிலேயே பதில் சொல்வதானால் அறிஞர் அண்ணா சொன்னதையே சொல்கிறேன். ''கெட்டிக்காரன் வாயால் முட்டாள் என்று பட்டம் வாங்காதே. முட்டாள் வாயால் கெட்டிக்காரன் என்று பட்டம் வாங்காதே''—இது அண்ணா கூறியது.

நல்லவேளை தீபம் பார்த்தசாரதி, அண்ணாவை அறிஞர் என்று அழைக்கவில்லை.

**கேள்வி:**

கேள்வி: தி. மு. க. வின் இன்றைய நிலை எப்படி இருக்கிறது?

**பதில்:**

பதில்: கறையான் புற்றெடுக்க 'கரு' நாகம் குடிபுகுந்து, புற்றை நாசப்படுத்தி விட்டது.

**கேள்வி:**

அயோக்கியர்களின் புகலிடம் அரசியல் என்று கூறுவது சரி தான் என்கிறேன்.........?

**பதில்:**

மற்ற அரசியல் தலைவர்களைவிட, நமது எதிர்க்கட்சித் தலைவரை மட்டுமே நீங்கள் உன்னிப்பாகக் கவனித்திருக்கிறீர்கள்.

### டெலிவிஷனில் கூறப்பட்டு வந்த

# இந்தி செய்தி ரத்து

## கழகக் கோரிக்கை வெற்றி

**சென்னை, நவ. 2- ஆகஸ்டு 15-ந்தேதி முதல் டெலிவிஷனில் கூறப்பட்டு வந்த இந்திச் செய்தி ரத்துச் செய்யப்பட்டு கழகத்தின் கோரிக்கைக்கு வெற்றி கிடைத்துள்ளது.**

கடந்த ஆகஸ்டு 15-ம் தேதி முதல் டெல்லியிலிருந்து ஒளிபரப்பாகும் தேசிய நிகழ்ச்சிகளை சென்னை டெலிவிஷன் நிலையம் அஞ்சல் செய்து வந்தது.

அதாவது இரவு 8.30 மணி முதல் 10 மணி வரையிலான நிகழ்ச்சிகள் அனைத்தும் டெல்லியிலிருந்து ஒளிபரப்பப்பட்டன. இதில் இரவு 8.30 மணி முதல் 8.45 மணி வரை இந்தி செய்தி அறிக்கை இடம்பெற்றது.

இப்படி இந்தியை திணித்ததற்கு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர், மற்றும் அனைத்துக்கட்சியினரும் எதிர்ப்பு தெரிவித்தனர்.

### முதல்வர் கோரிக்கை வெற்றி

இந்தித் திணிப்பை கைவிடும்படி பிரதமர் இந்திரா காந்திக்கு முதல்வர் புரட்சித்தலைவர் தந்தி அனுப்பினார். மற்றும்பல தலைவர்களும் தந்திகளும் கடிதங்களும் அனுப்பினர்.

கடந்த ஆகஸ்டு மாதம் 17-ந்தேதி நடந்த கழகச் செயற்குழுவில் கீழ்க்கண்டவாறு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

''இந்தி பேசாத மக்கள் சிறிது அயர்ந்தால் கழுத்தை வெட்டும் கத்தி விழுந்து விடும் என்பது போல் இப்படி இந்தித் திணிப்பு முயற்சிகள் தொடர்ந்து திட்டமிட்டு நடைபெற்று வருவதை கவலையோடு எடுத்துக்காட்டி இந்திய நாட்டின் ஒற்றுமையைக் கருதி இந்திய ஒருமைப்பாட்டிற்கு எதிரான இந்த அபாயகரமான செயல்களை உடனடியாகத் தடுத்து நிறுத்த வேண்டுமென இச் செயற்குழு இந்திய பிரதமர் இந்திரா காந்தி அவர்களை கேட்டுக் கொள்கிறது''.

இந்தி செய்தி ஒளிபரப்பும்போது டெலிவிஷனை நிறுத்தி விடும்படி பொது மக்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்தார்.

இதன் விளைவாக சென்னை டெலிவிஷனில் இந்தி செய்தி அறிக்கையை நிறுத்த மத்திய அரசு முடிவு செய்தது.

அதன்படி நேற்று முதல் (1-11-82) டெலிவிஷனில் இந்தி செய்தி இடம்பெறவில்லை.

இதையொட்டி டெல்லியிலிருந்து ஒளிபரப்பப்படும் தேசிய நிகழ்ச்சிகளை இனி இரவு 8.45 மணிமுதல் சென்னை டெலிவிஷன் நிலையம் ஒளிபரப்பும்.

# மகிழ்ச்சியுடன் போனஸ் பெற்ற போக்குவரத்து தொழிலாளர்கள்

**சென்னை, நவ. 2- புரட்சித்தலைவர் அரசு அறிவித்த போனஸ் தொகையை போக்குவரத்துத் தொழிலாளர்கள் நேற்று மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டனர்.**

தமிழகத்தில் உள்ள 64 ஆயிரம் போக்குவரத்து ஊழியர்களுக்கு நாலேமுக்கால் கோடி ரூபாய் அளவுக்கு தீபாவளி போனசாக தமிழக அரசு அறிவித்தது தெரிந்ததே.

தங்களுக்குரிய போனஸ் தொகையை சென்னையில் போக்குவரத்துத் தொழிலாளர்கள் மகிழ்ச்சியுடன் நேற்று பெற்றுக் கொண்டனர்.

கே.கே.நகர், வடபழனி, தண்டையார்பேட்டை, அடையாறு, தியாகராய நகர், திருவான்மியூர், மந்தவெளி, சைதாப்பேட்டை, தாம்பரம், குரோம்பேட்டை ஆகிய பணிமனைகளில் போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு போனஸ் வழங்கப்பட்டது.

குரோம்பேட்டை பணிமனையில் 100 சதவீத தொழிலாளர்கள் போனஸ் பெற்றனர். மற்ற டெப்போக்களில் சராசரி 80 சதவீத தொழிலாளர்களும் தலைமை அலுவலகத்தில் 85 சதவீத தொழிலாளர்களும் போனஸ் பெற்றனர்.

கூட்டம் அதிகமாக இருந்ததாலும், விடுமுறையில் இருந்ததாலும் மீதி தொழிலாளர்கள் நேற்று போனஸ் வாங்க இயலவில்லை.

### வரலாறு காணாத அளவு...

கருணாநிதி முதலமைச்சராக இருந்த ஆண்டுகளைவிட அதிக அளவில் இப்போது போக்குவரத்து தொழிலாளர்கள் அதிகமான தொகையை போனசாகப் பெற்றிருக்கிறார்கள்.

கருணாநிதி ஆட்சி நடந்த 1972-73ம் ஆண்டில் 260 ரூபாயும், 73-74-ஆம் ஆண்டில் 290 ரூபாயும் 74-75 ஆம் ஆண்டில் 120 ரூபாயும் போக்குவரத்துத் தொழிலாளர்கள் போனசாகப் பெற்றனர்.

75-76 ஆம் ஆண்டு ஜனாதிபதி ஆட்சியில் போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு போனசே வழங்கப்படவில்லை.

76-77 ஆம் ஆண்டில் 260 ரூபாய் வழங்கப்பட்டது.

இப்போது 665 ரூபாய் முதல் 950 ரூபாய் வரை போக்குவரத்துத் தொழிலாளர்கள் போனஸ் பெற்றிருக்கிறார்கள்.

### பஞ்சாலை தொழிலாளர் போனஸ் பற்றி பேச்சு

சென்னை, நவ. 2— பஞ்சாலைத் தொழிலாளர் போனஸ் பிரச்னை பற்றி இன்று பேச்சு வார்த்தை நடந்தது.

தொழிலாளர் நலத்துறை இணை ஆணையர் ராஜா சுப்பிரமணியம் முன்னிலையில் நடந்த இந்தபேச்சுவார்த்தையில் பல்வேறு தொழிற் சங்கங்களைச் சேர்ந்தவர்கள் கலந்து கொண்டனர்.

அண்ணா தொழிற் சங்கப் பேரவை சார்பில் வை. பெருமாள், நம்பிராஜன், கருப்புசாமி, கண்ணன் ஆகியோர் கலந்து கொண்டனர். பேச்சுவார்த்தை நாளையும் நடக்கிறது.

# எடுத்த கரமும் கொடுத்த கரமும்!

• எம். ஜி. ஆர். ஏன் கலைஞர் கரத்தைப் பிடித்தார் தெரியுமா? இருண்ட காலம் விரைந்து வந்து கொண்டிருக்கிறது. என்னைக் காப்பாற்ற வேண்டியது நீங்கள்தான். இந்தக் கரத்தைக் கொடுத்து உதவ வேண்டும் என்பதற்குத்தான்.

தி.மு.க. எம் எல். ஏ.
துரைமுருகன்

*

கருணாநிதி கையை புரட்சித்தலைவர் பிடித்ததற்கு அதுவல்ல தம்பி காரணம்!

கஞ்சிக்கு வழியில்லாமல் இருந்த கருணாநிதிக்குக் 'கை' கொடுத்து கை நிறையக் காசும் கொடுத்த கரம் புரட்சித்தலைவரின் கரம்!

கருணாநிதி சிறையிலிருந்தபோது மருமகனின் படிப்புச் செலவுக்கும், மற்றும் அவரது குடும்பச்செலவுக்கும் அள்ளிக் கொடுத்த கரம் பொன்மனச் செம்மலின் கரம்!

அரசியல் பள்ளத்தில் அவ்வப்போது கருணாநிதி விழுந்த போதெல்லாம் அவரைத் தூக்கிவிட்ட தாய்மையான கரம் புரட்சித் தலைவரின் கரம்!

எட்டுத் திக்கிலிருந்தும் கருணாநிதிக்கு வந்த எதிர்ப்புக்களைத் தட்டி நிறுத்திய கரம தங்கத்தலைவர் புரட்சித்தலைவரின் கரம்!

இத்தகைய கரத்துக்குச் சொந்தக்காரரான இதய தெய்வம் புரட்சித்தலைவரை கட்சியிலிருந்து தூக்கி எறிந்த கரம் கருணாநிதியின் கரம்

எடுத்து எடுத்துக் கறுத்துப் போன கருணாநிதியின் கரத்தை-

கொடுத்துக் கொடுத்துச் சிவந்த புரட்சித் தலைவரின் கரம் தொட்டால், கருணாநிதியின் கையில் உள்ள கறை தான் குறையும்.

இதே துரைமுருகனின் கழிசடைக் கரங்கள் எத்தனை முறை புரட்சித்தலைவரின் பாதங்களைத் தொட்டுப் பாவத்தைப் போக்கியிருக்கின்றன?

படிப்புச் செலவுக்குப் பணம் வாங்க புரட்சித்தலைவரிடம் எத்தனை முறை பல் இளித்துக் கரம் நீட்டியிருக்கிறார் இந்தத் துரைமுருகன்?

இன்று அறிவிலித்தனமாகப் பேசினால் இவையெல்லாம் மறந்து போகுமா?

கருணாநிதி கரத்தைப் புரட்சித்தலைவர் பிடித்ததற்கு-

''எல்லா வகையிலும் உனக்கு நேரம் சரியில்லை. உன் எதிர்காலமும் இருண்டிருக்கிறது. ஆனாலும் பயப்படாதே! இவ்வளவு நாள் உனக்குக் கை கொடுத்து உதவிய நான் இனியும் கைகொடுப்பேன்'' என்று தான் பொருள்.

ஏனென்றால் -

'கருணாநிதிக்கு ஆபத்து என்றால் அவரை காக்கும் பொறுப்பு நமக்கு உண்டு என்று இன்றும் கூறும் இனிய தலைவர் இளகியமனம் படைத்த தலைவர் புரட்சித் தலைவர்.

# திருமண செலவை கைவிட்டு சேமிப்பு பத்திரம் வாங்குவீர்

## நிதியமைச்சர் டாக்டர் நாவலர் வேண்டுகோள்

தர்மபுரி, நவ. 2- திருமண வீண் செலவை கைவிட்டு சேமிப்புப் பத்திரங்களில் முதலீடு செய்யுமாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கேட்டுக்கொண்டார்.



தர்மபுரியில் உலக சிக்கன நாள் விழாவில் கலந்து கொண்டு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்.

அவர் கூறியதாவது:— திருமண விழாக்களில் ஆடம்பரமாகப் பணம் செலவிட வேண்டாம். தங்க நகைகளில் ஏராளமான பணத்தைப் போடுவதும் வீணானதாகும்.

### சேமிப்பு பத்திரங்கள்

திருமணங்களில் செலவு செய்யும் பணத்தை புது மணத் தம்பதிகளுக்கு சேமிப்புப் பத்திரங்களாகக் கொடுக்கலாம்.

தங்க நகைகள் விசேஷ நிகழ்ச்சிகளுக்குத்தான் பயன்படுத்தப்படுகின்றன.

அவற்றை அணிந்திருந்தாலும், வீட்டில் வைத்திருந்தாலும் திருடர்கள் பயம் ஏற்படுறது.

எனவே பணம் இருந்தால் நகைகளை வாங்காதீர்கள், சேமிப்புப் பத்திரங்களை வாங்குங்கள்.

மத்திய அரசின் சிறு சேமிப்புத் திட்டத்தின் மூலம் மாநிலத்திற்கு ரூ.32கோடிகிடைக்கிறது. இது வருடாந்திர வரவு செலவுத் திட்டத்தில் கூடுதல் வரி விதிப்பதைத் தவிர்க்க உதவி புரிந்துள்ளது.

### வரதட்சணை ஒழிப்பு

வரதட்சணைக் கொடுமைகளை ஒழித்தாக வேண்டும்.

என்ஜினீயர் ஆவதற்கும் டாக்டர் ஆவதற்கும் அதிகச் செலவு ஆகிறது. எனவே வரதட்சணை அதிகம்கொடுங்கள் என்று மாப்பிள்ளை வீட்டார் கேட்பது தவறான செயலாகும்.

மருத்துவ மாணவனுக்கு ரூ. 5 லட்சத்தை அரசு தான் செலவிடுகிறது. இதே போல என்ஜினீயரிங் மாணவனுக்கு ரூ. 4 லட்சத்தை அரசு செலவு செய்கிறது. எனவே பட்டபடிப்புக்கு அதிகம் செலவாகிறது; வரதட்சணை வேண்டும் என்று கேட்க உரிமை கிடையாது.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

# திட்டக்குடி கழகப் பொதுக் கூட்டம்

திட்டக்குடி, நவ. 2— திட்டக்குடியிலுள்ள அறிஞர்அண்ணா திடலில் வரும் 6-ந் தேதி (சனி) மாலை 7 மணிக்கு கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

த. கமலக்கண்ணன் தலைமையில் நடக்கும் இந்தக் கூட்டத்திற்கு எம்.ஆர். சேகர் முன்னிலை வகிக்கிறார். வே. செல்வம் வரவேற்புரையாற்றுகிறார்.

இந்தக் கூட்டத்தில், சைதை ஆ. தமிழ்செல்வன் ஆ. கிருஷ்ணசாமி, பி. கலியமூர்த்தி எம் எல்.ஏ. இரா. அரங்கசாமி, வே. பிச்சைப்பிள்ளை, என்.ரத்தினம், தி. மு. ராமலிங்கம் ஆர். ஜி. கருணா, கே. ராமலிங்கம் கவர்னர், ஞானசேகரன், கோ. ராஜேந்திரன், பி. நாகராசன் செல்லப்பன், எம் ஆர்.வி. தமிழரசன் ஆகியோர் பேசுகின்றனர் திட்டக்குடி டி.ஆர். சுந்தரம் நன்றி கூறுகிறார்.

# சத்துணவுத் திட்டத்திற்கு நன்கொடை

சென்னை, நவ. 2— தமிழ்நாடு மெழுகுவர்த்தி தயாரிப்பாளர்கள் சங்கத்தின் சார்பாக சத்துணவுத் திட்டத்திற்கு, ஒரு கணிசமான தொகை தமிழக முதல்வரிடம் கொடுப்பது என்று செயற்குழு கூடி தீர்மானிக்கப்பட்டது.

சங்க செயற்குழுக் கூட்டம் சித்தம்மா காலனியில் உள்ள சங்கக் கட்டிடத்தில் எம். எம். பால்ராஜ் தலைமையில் நடந்தது. புதிய செயலாளராக எம். ஏ. ஜெயப்பிரகாஷ் தேர்ந்தெடுக்கப்பட்டார். தமிழக சத்துணவுத் திட்டத்தைப் பாராட்டியதோடு, அங்கத்தினர் ஒவ்வொருவரும் தாராளமாக நிதி வழங்க வேண்டும்,என்று செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியது.

## ஆர் குன்னத்தூரில்

# புலவர் அறிவுடைநம்பி பேசுகிறார்

போளூர், நவ. 2— போளூர் ஒன்றியம் ஆர். குன்னத்தூரில் நாளை (புதன் கிழமை) மாலை அண்ணா பிறந்தநாள் விழா பொதுக் கூட்டம் நடக்கிறது. வீரபத்திரன் தலைமை வகிக்கிறார். புலவர் அறிவுடைநம்பி, வேலு, செல்வன், கண்ணன், பரந்தாமன், ஏ. கோவிந்தன், ஜி. கண்ணன்,கண்ணபிரான், விஸ்வநாதன் ஆகியோர் பேசுகிறார்கள்.

### நிகழ்ச்சிகள் விவரம்

நவ. 3—குன்னத்தூர்
4—முருகம்பாடி
6—சென்னை 86—வது வட்டம்
7—நெய்வேலி

### முகவரி:

புலவர் அறிவுடைநம்பி
அம்புசம் இல்லம்
ஏ. ஐ. 92 அண்ணா நகர்
சென்னை—40

## சத்துணவு : நெல்லை மாவட்டப்பள்ளிகளில்

# 19 ஆயிரம் கூடுதல் மாணவர்கள்

தூத்துக்குடி, நவ. 2— சத்துணவுத் திட்டம் அமுல்படுத்தப்பட்டபிறகு திருநெல்வேலி மாவட்டத்தில் 19 ஆயிரத்து 300 கூடுதல் மாணவர்கள் பள்ளிகளில் சேர்ந்துள்ளதாக திருநெல்வேலி மாவட்ட கல்வி அதிகாரி சிவதாணு கூறினார்.

மாவட்டத்தில் 3 ஆயிரத்து 34 சத்துணவு மையங்கள் செயலாற்றி வருவதாகவும் அவர் மேலும் கூறினார்.

## அமைச்சர் குழந்தைவேலு அறிவிப்பு:

# நகராட்சிகளுக்கு குடி நீர் வழங்க ரூ.113 கோடி திட்டம்

கோவை, நவ. 2- நகராட்சிகளுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க ரூ. 113 கோடியில் ஒரு பெருந்திட்டம் தயாரிக்கப்பட்டு இருப்பதாக அமைச்சர் குழந்தைவேலு அறிவித்தார்.



கோவையில் நகராட்சி ஆணையாளர்கள் மாநாடு நடந்தது. அந்த மாநாட்டில் அமைச்சர் குழந்தைவேலு கலந்து கொண்டு பேசினார்.

அமைச்சர் குழந்தைவேலு பேசியதாவது:

சேலம், நெல்லை, திருச்சி நகரசபைகளை மாநகராட்சிஅந்தஸ்திற்கு உயர்த்த ஒரு சட்டம் கொண்டுவர உத்தேசிக்கப்பட்டுள்ளது வரும் பட்ஜெட் கூட்டத் தொடரில் இதற்கான மசோதாக்கள் வரும்.

உலக வங்கி உதவியுடன் குறைந்த செலவில் கழிப்பிடங்கள் கட்ட அரசு ஆலோசித்து வருகிறது.

15 நகர சபைகளில் ரூ. 16 கோடியில் இந்தத் திட்டம் செயல் படுத்தக் கருதப்பட்டுள்ளது.

### சேலம், திருச்சிக்கு ரூ. 50 கோடி திட்டம்

சேலம், திருச்சி நகரங்களில் மக்களது பொது வசதிகளை அதிகரிக்க உலக வங்கி உதவியுடன் ரூ. 50 கோடி திட்டம் ஒன்றும் தயாரிக்கப்பட்டு வருகிறது.

நகராட்சி பகுதிகளில் உள்ள மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க ஒரு மாஸ்டர் பிளான் தயாரிக்கப்பட்டு வருகிறது இந்தத்திட்டம் ரூ. 113 கோடி கொண்டதாகும்.

### உலகவங்கி உதவி

உலகவங்கி உதவியுடன் நடத்தப்படும் இந்த திட்டத்தால் 75 நகரசபைகள் பயன்பெறும்.

நகரசபைகளின் வருவாய் பெருக பழனி, திருச்சி, திருத்தணி போன்ற நகரசபைகளுக்கு யாத்ரீகர் வரிவிதிக்க அனுமதி வழங்குவது பற்றியும் ஆலோசித்து வருகிறோம்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

## அரசு ஏற்பாடு: பொது நிறுவனங்களில்

# படகுத்துறை தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு

சென்னை, நவ. 2. படகு கட்டும் துறையில் பணியாற்றி வேலை இழந்தவர்கட்கு பொது நிறுவனங்களில் வேலை வாய்ப்பு அளிக்க அரசு உத்திரவிட்டுள்ளது.

தமிழ்நாடு மீன்வளர்ச்சி கழகத்திற்கு சொந்தமான படகு கட்டும் துறை சென்னை, மண்டபம், நாகப்பட்டினம் ஆகிய இடங்களில் இயங்கி வந்தது.

இத்துறைகளில் நஷ்டம் மேற்பட்டதால் அரசு இதை மூடியது. எனினும் பணியாற்றி வந்த 566 தொழிலாளர்களுக்கும் சட்டப்படி வழங்க வேண்டிய நட்டஈட்டு தொகை வழங்கப்பட்டது.

ஆனாலும் வேலை இழந்த தொழிலாளர் நிலையை அரசு பரிசீலித்து அவர்களுக்கு அரசாங்கத்தின் பொது நிறுவனங்களில் வேலை வழங்க அரசு உத்தரவிட்டுள்ளது.

### வேலை வாய்ப்பில் முன்னுரிமை

போக்குவரத்துத் துறை மாநகராட்சி, குடிசை மாற்று வாரியம் சிறு தொழில் வளர்ச்சி வாரியம் போன்ற இடங்களில் வேலைகாலியாகும் போதோ அல்லது புதிய வேலை வாய்ப்பு உருவாகும் போதோ படகு கட்டும் துறைத் தொழிலாளர்களுக்கு முன்னுரிமை வழங்க அரசு உத்தரவிட்டுள்ளது.

அவர்களின் கல்வித் தகுதி, முன் அனுபவம் ஆகியவற்றை கருத்தில் கொண்டு எங்கெங்கு சாத்தியமாக இருக்கிறதோ அங்கெல்லாம் வேலை அளிக்கப்படும்.

அவர்களுக்கு 3 மாத குறுகிய கால பயிற்சியும் பயிற்சி காலத்தில் உதவித் தொகையும் வழங்கப்படுகிறது.

இவ்வாறு அரசுக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# ஆசாமி கைது

சென்னை, நவ. 2— சென்னை ஜி. என். செட்டித் தெருவில் கிருஷ்ணமூர்த்தி என்பவர் நடந்து வந்து கொண்டிருந்தபோது சைக்கிளில் வந்த இருவர், கிருஷ்ணமூர்த்தி சட்டைப் பையில் வைத்திருந்த 405 ரூபாயை பறித்துச் சென்றனராம்.

கிருஷ்ணமூர்த்தி சத்தம் போடவே, அவ்வழியாக ஸ்கூட்டரில் வந்த கோபிநாத், கோபி ஆகிய இருவரும் சைக்கிளில் சென்றவர்களை விரட்டிச் சென்றனர்.

இதில் ஒரு ஆசாமி தப்பி ஓடிவிட்டான். சண்முகம் என்ற மற்றொரு ஆசாமி கைது செய்யப்பட்டு பணம் மீட்கப்பட்டது.

# மரம் வளர்த்தால் இடம் சொந்தம்: அரசு உதவி விவரம்:

சென்னை, நவ. 2- வீடுகளிலோ, வீட்டின் முன்பாகவோ மரம் வளர்த்தால் அரசு உதவி அளிக்கிறது.

மரங்கள் வளர்ப்பதன் மூலம், அதனால் ஏற்படும் பசுமையினால் மழை பெய்வது அதிகரிக்கும் என்ற விஞ்ஞான உண்மைக்கேற்ப, மரம் வளர்க்க ஊக்கம் தருகிறது தமிழக அரசு.

மரத்துக்கான கன்றுகளை அரசு இலவசமாக வழங்குகிறது. அத்துடன் அந்தச் செடிக்கு வேலி போடுவதற்கான பொருள்களையும் அரசே வழங்கும்.

மரத்தை வீடுகளின் எதிரிலோ அல்லது ரோட்டின் ஓரத்திலோ வளர்த்துதண்ணீர் ஊற்றி பராமரித்தால் அந்த இடத்துக்கு "2 சி" பட்டா வழங்கவும் அரசு முடிவு செய்துள்ளது.

# விஞ்ஞானிகட்கு வேலை வாய்ப்பு: தனிக்குழு அமைப்பு

சென்னை, நவ. 2— விஞ்ஞானிகளுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தர வேண்டும் என்று பிரதமர் இந்திரா ஏற்கனவே கூறியிருந்தார். அதன்படி அவர்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படுத்தித் தருவதற்கான ஆலோசனைகள் கூற அண்ணாமலை பல்கலைக் கழக துணைவேந்தர் சிட்டிபாபு தலைமையில் குழு அமைக்கப்பட்டுள்ளது.

சென்னை பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சாந்தப்பா, நிதித்துறை செயலாளர் திட்ட வளர்ச்சித் துறை செயலாளர், கல்வி விஞ்ஞானத்துறை செயலாளர், தொழில் நுட்பக் கல்வி இயக்குனர், பொது சுகாதாரத்துறை இயக்குனர் ஆகியோர் உறுப்பினர்களாக இருப்பார்கள். 31-1 83க்குள் இந்தக் கமிட்டி தனது பரிந்துரை அடங்கிய அறிக்கையை அரசுக்குக் கொடுக்கும்.

## மன்னார்குடியில் கழகக் கொடியேற்று விழா

# அமைச்சர் ஆர். எம். வீ. பங்கேற்றார்



மன்னார்குடி, நவ. 2— மன்னார்குடி ஒன்றியம் பரவாக்கோட்டையில் கழகக் கொடியினை அமைச்சர் ஆர். எம். வீ. ஏற்றி வைத்தார். விவசாய கிடங்கு மற்றும் பள்ளி கட்டிடத் திறப்பு விழா நிகழ்ச்சிக்கு வருகை தந்தபோது ஒன்றிய அமைப்பாளர் சா. ஞான சுந்தரம் தலைமையில் அமைச்சர் ஆர்.எம்.வீக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

சுந்தரக் கோட்டையில் நவீன அரிசி ஆலையில் அண்ணா தொழிற்சங்கக் கொடியினை அமைச்சர் ஆர். எம். வீ. ஏற்றிவைத்தார்.

நிகழ்ச்சிகளில் கரும்புப் பண்ணைக் கழகத் தலைவர் திருவாரூர் தென்கோவன், சா. ஞானசுந்தரம், வி. ஆர். கே. பழனியப்பன் மற்றும் சிவப்பிரகாசம், பரவை. பாலன், ப. காசிநாதன், எம். கே. கலியபெருமாள் சா. சம்பந்தம் தங்க இராசேந்திரன்,சந்திரன், இரா. இராசகோபால் மற்றும் மன்றமறவர்கள் திரளாக கலந்துகொண்டனர்.

## ஜவுளிக் கடையில்

# பர்ஸ் திருட்டு: பெண் கைது

சென்னை, நவ. 2— சென்னை தியாகராயநகரில் உள்ள ஒரு ஜவுளிக் கடையில்ரத்தினக்கண்ணு என்ற பெண் துணிகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த போது சூளைமேட்டைச் சேர்ந்த கலா (வயது 21) என்ற பெண் ரத்தினக்கண்ணு வைத்திருந்த பர்சை திருடிச் சென்றாராம். வெளியில் இருந்த போலீஸ்காரர் கலாவை கைது செய்து பணத்தை மீட்டார்.

# போர்க்கைதி விடுதலை: இந்தியா-பாகிஸ்தான் ஒப்பந்த விவரம்

புதுடெல்லி நவ. 2 இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே ஒப்பந்தம் கையெழுத்தானது.

பாகிஸ்தான் அதிபர் ஜியாவுல்ஹக் நேற்று டெல்லி வந்து பேச்சு வார்த்தை நடத்தினார் அல்லவா?

அதன்பின் அவர் தாய்லாந்து, கோலாலம்பூர் ஆகிய இடங்களுக்கு சுற்றுப் பயணத்திற்கு புறப்பட்டுச் சென்றார்.

பாகிஸ்தான் அதிகாரிகளும், இந்திய அதிகாரிகளும் தொடர்ந்து பேச்சு வார்த்தை நடத்தினார்கள்.

### இருநாடுகள் சம்மதம்

இன்று உடன்படிக்கை ஏற்பட்டு இந்தியா சார்பில் வெளி விவகார செயலாளர் கே. நத்வார்சிங்கும், பாகிஸ்தான் சார்பில் இந்தியாவிலுள்ள பாகிஸ்தான் தூதர் ரியாஜ் பிரச்சாவும் கையெழுத்திட்டனர்.

இந்தியாவில் காவலில் வைக்கப்பட்டுள்ள அல்லது கைது செய்யப்பட்டுள்ள பாகிஸ்தானியரையோ, அல்லது பாகிஸ்தானில் பிடித்து வைக்கப்பட்டுள்ள இந்தியரையோ தத்தம் நாட்டு பிரதிநிதிகள் மூலம் தொடர்பு கொண்டு அவர்களுக்கான வசதிகள் செய்து தர உடன்பாடு செய்யப்பட்டது.

அவர்கள் பற்றிய விவரங்களை வெளியிடவும் இரு நாடுகளும் ஒத்துக் கொண்டன.

பாகிஸ்தானில் இந்தியர்கள 300 பேரும், இந்திய ராணுவ வீரர்கள் 43பேரும் காவலில் உள்ளனர்.

அரசியல் மற்றும் பாதுகாப்பு காரணங்களுக்காக கைது செய்யப்பட்டவர்களுக்கும், இதர குற்றங்களுக்காக கைது செய்யப்பட்டவர்களுக்கும் இந்த உடன்பாடுபொருந்தாது.

கைதிகள் பட்டியலை தயாரித்து இருநாடுகளும் ஒருவருக்கொருவர் மாற்றிக் கொள்வார்கள்.

கைதிகள் மற்றும் கோர்ட்டு தண்டனை பெறாத, அல்லது தண்டனை பெற்றிருந்தால் தண்டனைகாலம் முடிந்தவர்களை விடுவித்து அவர்கள் நாட்டில் கொண்டுபோய்ச் சேர்ப்பது பற்றிய விதிமுறைகள் பின்னர் விவாதிக்கப்படும் என்று அந்த ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

# துறையூரில் அமைச்சர் எஸ். என். ராசேந்திரன் பேசுகிறார்

திருச்சி, நவ. 2— துறையூரில் நாளை (புதன் கிழமை) நடைபெறும் கழகப் பொதுக்கூட்டத்தில் அமைச்சர் எஸ். என். ராசேந்திரன், கே. சவுந்திரராசன் எம். எல். ஏ. என். நல்லுசாமி, எம். கே. ராஜமாணிக்கம், அண்ணாதாசன்எம். எல். ஏ. வடிவேலு, எஸ். ஜெகதீசன் ஆகியோர் பேசுகிறார்கள். வெ. அரங்கராசன் முன்னிலை வகிக்க, து. ராஜா தலைமை தாங்குகிறார்.

## 75 முறை சிறை சென்ற

# ஆசாமிக்கு தடுப்புக் காவல்படி ஜெயில்

சென்னை, நவ. 2— சென்னையைச் சேர்ந்த மனோகரன் கத்தியைக் காட்டி மிரட்டி வழிப்பறி செய்பவராம்.

இதற்கு முன் 75 முறை சிறைசென்ற மனோகரன் சென்னை வடக்கு கடற்கரை சாலையில் கத்தியைக் காட்டி வழிப்பறி செய்ய முயன்றாராம்.

இதையடுத்து மனோகரன் கைது செய்யப்பட்டு தடுப்புக் காவல் சட்டத்தின்படி ஓராண்டு ஜெயிலில் வைக்கப்பட்டார்.

# பூம்புகார் நடத்தும் துணிக் கண்காட்சி

சென்னை, நவ. 2— தமிழ்நாடு கைவினைப் பொருட்கள் வாரியம் சார்பில் பல்வேறுமாநிலங்கள் பங்கேற்கும் துணி விற்பனைக் கண்காட்சி இம்மாதம் 1-ந் தேதி முதல் 10-ந் தேதி வரை ராஜாஜிஹாலில் நடைபெறுகிறது.

கண்காட்சியில் விற்பனை காலை 10 மணி முதல் இரவு 8மணி வரை நடைபெறுகிறது.

கண்காட்சி பற்றி பூம்புகார் நிறுவன முதுநிலை மேலாளர் ஆர். கிருஷ்ணசாமியும், விற்பனை மேலாளர் (கண்காட்சி) சௌரிராஜனும் நிருபர்களிடம் விளக்கிக் கூறினார்கள். கண்காட்சியில் தமிழக கைத்தறி, காஞ்சிபுரம் பட்டு, சுங்கடி சேலை ரகங்கள் உள்ளன.

# ஆர். வி.யுடன் திருநாவுக்கரசு சந்திப்பு: பாதுகாப்புத் துறை தொழில்களை தமிழகத்தில் அமைக்க வலியுறுத்தல்

புதுடெல்லி, நவ. 2- பாதுகாப்புத்துறைத் தொழில்களை தமிழ்நாட்டில் துவக்க வேண்டும் என மத்திய பாதுகாப்பு அமைச்சர் ஆர். வெங்கட்ராமனை தமிழக தொழிலமைச்சர் திருநாவுக்கரசு இன்று சந்தித்து வலியுறுத்தினார்.

மத்திய பாதுகாப்புத் துறை அமைச்சர் ஆர். வெங்கட்ராமனை தமிழக தொழிலமைச்சர் திருநாவுக்கரசு இன்று (2-ந் தேதி) காலை சந்தித்துப் பேசினார்.

தமிழ்நாட்டில், பாதுகாப்புத்துறை தொடர்புடைய தொழிற்சாலைகளை அமைக்க மத்திய அரசு முன் வர வேண்டும் என மத்திய அமைச்சர் வெங்கட்ராமனிடம் அமைச்சர் திருநாவுக்கரசு கேட்டுக் கொண்டார்.

இதன் மூலம் தமிழக தொழில் துறை மேலும் வளர்ச்சியடையும்எனவும் அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.



இன்று மாலை டெல்லி வர்த்தகப் பொருட்காட்சியில், தமிழக தினம் நடைபெறுகிறது. இதில் மத்திய அமைச்சர்கள் ஆர். வெங்கட்ராமன், பிரணாப்முகர்ஜி, என்.டி. திவாரி, தமிழக கவர்னர் குரானா, தமிழக அமைச்சர்கள் கே.ஏ.கே திருநாவுக்கரசு ஆகியோர் பங்கேற்கிறார்கள்.

## கே.ஏ.கே. முன்னிலையில்

# கழகத்தில் இணைந்த ஐம்பது தி.மு.க.வினர்

சென்னை, நவ. 1— ஆயிரம் விளக்கு தொகுதி 124-வது வட்டத்தைச் சேர்ந்த தி. மு. க. வினர் 50 பேர் அந்தக் கட்சியிலிருந்து விலகி அமைச்சர் கே. ஏ. கே. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது மாவட்ட கழக அவைத்தலைவர் அங்கமுத்து, வட்டச் செயலாளர் காசிம் ஆகியோர் உடனிருந்தனர்.

## தீபாவளிக்கு அதிகமாக ஒரு கிலோ பாமாயில் எண்ணெய்

சென்னை, நவ. 2— தீபாவளி பண்டிகையை முன்னிட்டு இம்மாதம் நகர்ப்புறங்களில் ஒவ்வொரு ரேஷன் கார்டுக்கும் வழக்கமான அளவைவிட ஒரு கிலோ கூடுதலாக பாமாயில் வழங்கப்படும் என்று அரசு பத்திரிகை குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

சத்துணவு திட்டத்திற்கு

## ஸ்டேஷனரி அச்சக ஊழியர்கள் நன்கொடை

சென்னை, நவ. 2— தமிழக அரசு ஸ்டேஷனரி அச்சகத்துறை ஊழியர்கள் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்துக்கு நன்கொடை வழங்கியுள்ளனர்.

ரூ. 75,001க்கான காசோலையை அவர்கள் நன்கொடையாக அளித்துள்ளனர்.

(7 ம் பத்தி தொடர்ச்சி

பட்டுள்ளனர். தொடர்ந்து ராணுவம் ரோந்து சுற்றி வருகிறது.

உத்திரபிரதேச மாநிலம் மீரட்டிலும் தொடர்ந்து நிலவரம் மோசமாக உள்ளது.

மீரட்டில் நடந்தகுண்டு வீச்சில் 7 வயது சிறுமி படுகாயமடைந்தாள்.

போலீசார் அப்பகுதியில் உள்ள வீடுகள் அனைத்தையும்சோதனை இட உத்தரவிட்டனர்.

இது தொடர்பாக பெண் ஒருவர் கைது செய்யப்பட்டார்.

### அகமதாபாத்

அகமதாபாத்தில் நடந்த கோஷ்டித் தகராறை அடுத்து போலீசார் கண்ணீர்புகைகுண்டுகளை வீசினார்கள்.

அமைச்சர் ராசாமுகமது பேச்சு:

# தமிழர்கள் உணர்வை பிரதிபலிக்கும் ஒரே இயக்கம் கழகமே

**சென்னை, நவ 2. அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் அரசியல் கட்சி மட்டுமல்ல. தமிழர்களின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் இயக்கம் அது என்று அமைச்சர் ராசாமுகமது கூறினார்.**

சென்னை 87—வது வட்டம், கலவல செட்டித் தெருவில் நடந்த அண்ணா பிறந்தநாள் விழாப் பொதுக்கூட்டத்தில் கலந்துகொண்டு பேசுகையில் அமைச்சர் ராஜாமுகமது கூறியதாவது:—

அண்ணா பிறந்தநாள் செப்டம்பர் மாதம் வருகிறது. அவரது பிறந்த நாளை அக்டோபர், நவம்பர் மாதமும் கொண்டாடுகிறோம்; காரணம் அவரது பிறந்த நாளை ஆண்டு முழுவதும் கொண்டாடினாலும் நமக்கு ஆசை தீராது. அந்த வகையில் சகாப்தத்தை உருவாக்கிய தலைவர் அவர்.

பெருந்தலைவர் காமராஜ் முதல்வராக இருந்த போது, அண்ணா எம்.எல்.ஏ வாக இருந்தார். ஒரு நாள் காமராஜரிடம் ''தனது தொகுதியில் உள்ள மண்டல் கிராமத்திற்கு வர தேதி தரவேண்டும்'' என்றார் அண்ணா.

'லட்சோப லட்சம் இளைஞர்கள் உங்களிடம் தேதி கேட்க தவம் இருக்கிறார்கள், நீங்கள் என்னிடம் தேதி கேட்கிறீர்களே' என்றார் காமராஜர்.

### அண்ணாவின் சிறப்பு

''எம்.எல்.ஏ என்ற முறையில் நான் உங்களிடம் தேதி கேட்கிறேன். வரவேண்டும்'' என்றார் அண்ணா.

அப்படியே நிகழ்ச்சியில் கலந்துகொள்ள இருவரும் மண்டல் கிராமத்திற்குப் போகிறார்கள். அந்த சமயம் மழைக்காலம் மேடையில், பேசும்போது மழை பெய்கிறது. அண்ணா ராஜகோபாலிடம் இருந்த குடையை வாங்கிக் கொண்டு காமராஜருக்கு பிடிக்கிறார்.

''நீங்கள் இதைச்செய்ய வேண்டுமா'' என்று காமராஜர் அண்ணாவைப் பார்த்து கேட்கிறார்.

''என் முதல்வருக்கு நான் செய்யாமல் யார் செய்வார்கள்?'' என்று அண்ணா கூறுகிறார். இதுதான் அண்ணா.

கம்யூனிஸ்டு கட்சி, காங்கிரஸ், சுதந்திரா கட்சி போன்ற எத்தனையோ கட்சிகள் பிளவுபட்டன. ஆனால் அதற்குப் பிறகு அவை புத்துயிர் பெறவில்லை.

பிரிந்ததற்குப் பிறகு அந்தக் கட்சிகள் உருப்பட்டதா என்றால் இல்லை.

தி. மு. க. விலிருந்து பிரிந்து உருவான அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஒன்றுதான் ஒன்றாக இருந்தபோது இந்த சக்தியைக் காட்டிலும் இரண்டு மடங்கு சக்தி கொண்டதாக விளங்குகிறது.

அண்ணாவின் பண்புகள், அவரது கொள்கைகள் தான் இதற்குக்காரணம். அதனால் தான் நவம்பர் மாதமும் அவர் பிறந்த நாளைக் கொண்டாடுகிறோம்.

நம்மை சுற்றியுள்ள ஆபத்துக்களை குறைத்து மதித்து விடாதீர்கள்.

பெரியகுளம் தேர்தலில் நாம் வெற்றிபெற்றோம். ஆனால் நாம் பெற்ற வெற்றி, பெறவேண்டிய அளவு குவிக்கவில்லை என்ற வருத்தம் எனக்குண்டு. அப்படி ஒரு வலிமையான இடம் பெரியகுளம்.

### வெற்றிக்கனி

அங்கு எல்லா எதிர்க்கட்சிகளும் அடிப்படை பண்புகளை மறந்து, பொறாமை காரணமாக, சேரக் கூடாதவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து நம்மை எதிர்த்துள்ளனர். ஆனாலும் நாம் வெற்றி வாகை சூடினோம்.

காட்டில் செந்நாயை தனியாகப் பார்த்தால் ஆபத்து, இது வேட்டையாடச் சென்றவர்களுக்குத் தெரியும். முதலில் ஒரு செந்நாய்தான் தெரியும். எது வருகிறது; யார் வருகிறார்கள், சிங்கமா? மனிதனா என்று அது பார்க்கும். எத்தனைபேர் வருகிறார்கள் என்று அவர்களின் ஆற்றலைத் தெரிந்து கொள்ளும்.

பிறகு சிறிது நேரத்தில் 10 செந்நாய்கள் சுற்றிக் கொள்ளும். பின்னர் அரைமணி நேரத்தில் 100 செந்நாய்கள் வளைத்துக் கொள்ளும். அப்படி வளைத்துக் கொண்டால் அந்தப் பிடியிலிருந்து சிங்கம் கூட தப்பி வருவது கடினம் தான்.

### எதிர்நீச்சல்

பெரியகுளம் தேர்தலில் முதலில் தி. மு. க. என்ற செந்நாய் வந்தது. நாம் ஒன்றுதான் வருகிறது என்று நினைத்தோம். பின்னர் இன்னொன்றும் வந்தது; 3-வதாக வேறு ஒன்றும் வந்தது கடைசியில் கொள்கையை விட்டு திரை மறைவில் நமக்கு எதிராக வேலை செய்த கம்யூனிஸ்டு வந்தது. அவற்றை வென்று, அரிமா நோக்கோடு, சிங்கமென சிலிர்த்து வந்தவர் முதல்வர் புரட்சித் தலைவர்.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் அரசியல் கட்சி மட்டுமல்ல; தமிழக மக்களின் உணர்வுகளை பிரதிபலிக்கும் கட்சி.

திருச்சி வட்டத்தில் 'இனாம் குளத்தூர்' என்ற கிராமம் இருக்கிறது.

அங்கு புதிய அணை கட்டவேண்டும் என்று கேட்கிறார்கள். இந்த தொகுதி, அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொதுச் செயலாளராக இருக்கும் திருச்சி ஆர். சவுந்திரராசன் தொகுதி, அவரும் அங்கு அணை கட்ட வேண்டும் என்று சொல்கிறார்.

நான் அணைகட்ட உத்தரவிடுகிறேன். பக்கத்து தொகுதியைச் சேர்ந்த கம்யூனிஸ்டு கட்சி எம்.எல்.ஏ. இந்த அணை கட்டக்கூடாது. தனது தொகுதியைபாதிக்கும் என்கிறார்;

நான் அவரிடம் விளக்கிக் கூறுகிறேன். அணைகட்டுவதற்கு என்று விதிகள் உள்ளன. வெறும் விருப்பத்தால் மட்டுமே அணை கட்ட முடியாது. அந்த பகுதிக்கு கீழே இருப்பவர்கள், மேலே இருப்பவர்கள் அனுபவிக்கும் பாசன உறுதியை அளித்துவிட்டுத்தான் அணை கட்டப்படும் என்கிறேன்.

முதல்வரிடம் இந்த விஷயம் செல்கிறது. அவரும் ஆய்வு செய்து அமைச்சரின் கருத்து சரி அணை கட்டலாம் என்கிறார்.

### இப்படியா பேசுவது?

அணை கட்டும்போது உயர்நீதிமன்றத்தில் தடை வாங்குகிறார்கள். என்ன சொல்லி வாங்குகிறார்கள் தெரியுமா?

நீர்ப்பாசனத் துறை அமைச்சர் ராசாமுகமது ஒரு முஸ்லிம் 'இனாம் குளத்தூர்' என்ற கிராமத்தில் முஸ்லிம்கள் அதிகம் உள்ளனர். அதனால்தான் அணை கட்டுகிறார்கள் என்கிறார்கள். சாதி மதம் பற்றி ஒரு கம்யூனிஸ்டா பேசுவது?

அதுவும் ஒரு எம்.எல்.ஏ. சாதி, மதம் பற்றி பேசுகிறார் என்றால் நாடு எங்கே போகிறது? இதற்கு அடிப்படைக் காரணம் என்ன?

புரட்சித் தலைவர் புகழைக் கண்டு பொறாமைப்படுகிறார்கள். பெரியகுளம் தேர்தலில் திரைமறைவில் நாடகம் ஆடியவர்களையும், நாம் வெற்றி பெற்றுள்ளோம்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது பேசினார்.

### கூட்ட விவரம்

இந்தக் கூட்டத்திற்கு பாண்டியன் தலைமை வகித்தார்.

திருவை அண்ணாமலை, சென்னை மாவட்ட மன்ற செயலாளர் இ. மதுசூதனன், பொத்தனூர் மணிமாறன் தொகுதி செயலாளர் மு. அன்புத்தம்பி, துரைராஜ், மயிலை ராமசாமி, மாங்குடி மதி, ராஜேந்திரன், சிந்தை சிவலிங்கம் ஆகியோரும் பேசினர்.

மதுரையில்

# தார்க்குண்டே மீது தாக்குதல் நடந்ததா? விசாரணைக்கு உத்தரவு

**சென்னை, நவ. 2— மனித உரிமைகள் காப்பு மக்கள் இயக்கத் தலைவரும், சட்ட நிபுணருமான தார்க்குண்டே மீது தாக்குதல் நடந்ததா என்பது பற்றி ஆர். டி. ஓ விசாரணைக்கு அரசு உத்திரவிட்டுள்ளது.**

மதுரை சம்பவத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் தனது வருத்தத்தைத் தெரிவித்துள்ளார்.

மனித உரிமைகள் காப்பு மக்கள் இயக்கத் தலைவரும் சட்டநிபுணருமான வி. எம். தார்க்குண்டே மதுரையில் தாக்குதலுக்கு ஆளானதாக சில பத்திரிகையில் செய்தி வெளி வந்தது.

இதனைத் தொடர்ந்து இந்தச் சம்பவம் குறித்து விசாரணை நடத்தும்படி ரெவின்யூ டிவிஷனல் அதிகாரிக்கு அரசு உத்திரவிட்டுள்ளது.

அவர் அது பற்றி விசாரணை நடத்தி ஒரு வாரத்தில் அரசுக்கு அறிக்கை தரும்படியும் கோரப்பட்டு இருக்கிறது.

தார்க்குண்டே தாக்குதலுக்கு ஆளானதற்கு முதல்வர்புரட்சித்தலைவர் வருத்தம் தெரிவித்துள்ளார்.

அரசு உள்துறை செயலாளர் டி. வி. வெங்கட்ராமன் முதல்வர் புரட்சித்தலைவரின் வருத்தத்தை தார்க்குண்டேயிடம் நேரில் தெரிவித்தார்.

# பரோடாவில் ஓயாத கலவரம்: மேலும் ஒருவர் மரணம்

**பரோடா, நவ 2 பரோடாவில் ஊரடங்கு தளர்த்தப்பட்ட நேரத்தில் மீண்டும் கலவரம் ஏற்பட்டது. கத்திக்குத்தில் ஒருவர் மாண்டார்.**

பரோடா நகரில் கடந்த சில நாட்களாக வன்முறை கலவரங்கள் நடந்து வருவது தெரிந்ததே.

கலவரங்களை அடக்கப் போலீசார் தடியடி நடத்தி கண்ணீர்புகை குண்டுகளை வீசினார்கள்.

அப்படியும கலவரம் அடங்காததால், துப்பாக்கிச் சூடும் நடத்தினார்கள்.

துப்பாக்கிச் சூட்டில் ஒருவரும் கத்திக்குத்தில் 5 பேரும் மாண்டனர்.

இதையடுத்து நகரின் பல பகுதிகளில் ஊரடங்கு உத்தரவு பிறபிக்கப்பட்டது.

ராணுவம் முக்கிய பகுதிகளில் ரோந்து வருகிறது,

நேற்று 3 மணி நேரம் ஊரடங்கு உத்தரவு தளர்த்தப்பட்டது.

அந்த நேரத்தில் மீண்டும் கலவரம் ஏற்பட்டது.

வெடிகடங்கு ஒன்றுக்கும் 3 கடைகளுக்கும் தீ வைக்கப்பட்டது. போலீசார் கண்ணீர்புகை குண்டுகளை வெடித்து கூட்டத்தைக் கலைத்தனர்.

2 கத்திக்குத்துச் சம்பவங்கள் நடந்தன. இதில் ஒருவர் மாண்டார்.

### மீரட்டில் குண்டு வீச்சு

இதுவரை நகரில் 545 பேர்கள் கைது செய்யப்

(1-ம பத்தி பார்க்க)

சத்துணவு திட்டத்திற்கு

## பொறியாளர்கள் அளித்த நன்கொடை

தூத்துக்குடி, நவ. 2— முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்கு பொதுப் பணித்துறை பொறியாளர் சங்கத்தின் சார்பில் ரூ. 5148 நன்கொடையாக அளித்துள்ளனர்.

கதர் மற்றும் பொதுப் பணித்துறை அமைச்சரிடம் இந்த நன்கொடை வழங்கியுள்ளனர்.

பொதுப் பணித்துறை மின் பொறியாளர் சங்க சார்பில் ரூ. 1000 நன்கொடை வழங்கப்பட்டது.



# நிலநீர் ஆய்வு செய்து மக்களுக்கு உதவிட தனி அமைப்பு

**சென்னை, நவ. 2- கிராமம் தோறும் நிலநீர் ஆய்வு செய்து கிணறுதோண்ட ஏற்ற இடம் பற்றி மக்களுக்கு கூறிட மாவட்டந் தோறும் தனி அமைப்பை அரசு அமைத்துள்ளது.**

தமிழ்நாட்டில் உள்ள எல்லா மாவட்டங்களிலும் நிலநீர் ஆய்வு செய்வதற்காக பொதுப்பணித் துறையின் கீழ் எல்லா மாவட்டங்களிலும் ஒரு நிலநீர்கோட்டம் இயங்கிக் கொண்டிருக்கிறது.

இப்பணியின் முக்கிய நோக்கம் கிராமம் கிராமமாக எங்கு நில நீர் குடிநீருக்கும் விவசாயத்துக்கும் பயன்படக் கூடிய அளவில் உள்ளது என்பதை ஆய்வு செய்து அந்த ஆய்வு முடிவின் பேரில் அந்த இடங்களை பொதுமக்களின் உபயோகத்திற்காக சுட்டிக் காட்டுவது.

மேலும் எந்த வகையான கிணறுகள் அல்லது குழாய் கிணறு அல்லது தோண்டு கிணறு சிறந்தது என்பதையும் ஆராய்ந்து அதற்கேற்ப அறிவுரைகள் வழங்கப்படுகின்றன.

### பரிந்துரை

குழாய் கிணறுகள், தோண்டு கிணறுகள் எந்த அளவு ஆழம் தேவை என்பதையும் இந்தப் பணி எடுத்துரைக்கிறது. குழாய் கிணறுகளில் எந்த அளவில் சல்லடை குழாய்கள் தேவை என்பதையும் ஆராய்ந்து பரிந்துரை வழங்கப்படுகிறது.

இப்பணி கிராமம் வாரியாகமுடிவடையஇன்னும் சில ஆண்டுகள் பிடிக்கும். இருப்பினும் ஆய்வு செய்யப்பட்ட இடங்களில் உள்ள விவரங்களை பொதுமக்களுக்கு வழங்கினால் நன்மையெனக் கருதி இத்திட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் கீழ் பொது மக்கள் நிலநீர் எடுக்க கிணறுகள்தோண்டுவதற்கு முன்பு ஆங்காங்கே மாவட்டங்களில் உள்ள நில நீரியலாளர்களை அணுகினால் அவர்கள் எத்தன்மையான கிணறுகள், எவ்வளவு ஆழம போட வேண்டும் என்பதை பொது மக்களுக்கு கூறுவார்கள்.

பொதுமக்கள் அவர்களின் கருத்துக்களைக் கேட்டு கிணறு தோண்டினால் கூடியவரை நல்ல கிணறுகளாக அமைவதற்கு வாய்ப்பு அதிகம் உள்ளது.

மாவட்டங்களில் ஒரு சில இடங்களில் தீவிர ஆய்வுகள் செய்யப்பட்டு நல்ல புள்ளி விவரங்கள் உள்ளன. அந்த பகுதியில் உள்ள மக்களுக்கு விபரங்கள் தெளிவாக சிறந்த முறையில் அறிவிக்கப்படும். ஆய்வு செய்து கொண்டிருக்கும் மற்ற பகுதியில் ஓரளவு விபரங்கள் கூறமுடியும்.

### கட்டணம் இல்லை

ஆகையால் பொது மக்கள் இத்திட்டத்தினை பயன்படுத்தி மேற்படி அலுவலகங்களை அணுகி அங்குள்ள வல்லுனர்களுடைய கருத்துரைகளைப்பெற்று கிணறுகள் தோண்டினால் அவை பயனுள்ள கிணறுகளாக அமைய வாய்ப்புள்ளது. இந்த விபரங்கள் அறிய எவ்விதக் கட்டணமும் கிடையாது. யாரும் பணம் செலுத்த வேண்டாம்.

தனிப்பட்ட நபர்களுக்கு அவர்களுடைய இடங்களில் தனி ஆய்வு நடத்த குறைந்த அளவு கட்டணம் செலுத்தி களப்பணி செய்யும் திட்டம் தற்போது தருமபுரி மாவட்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. இத்திட்டம் மற்ற மாவட்டங்களுக்கும் விரிவு படுத்த அரசு ஆணை பிறப்பித்துள்ளது. ஆகவே இனி எல்லா மாவட்டங்களிலும் தனிப்பட்ட நபர்களுக்கு களப்பணி செய்ய முடியும்.

இந்த திட்டத்தின் கீழ் நில நீர் கிணறுகள் தோண்ட திட்டமிட்டுள்ள பொதுமக்களும விவசாயிகளும் அந்தந்த மாவட்டங்களிலுள்ள அதிகாரிகளை அணுகலாம். இந்த திட்டத்தினால் ஏழை, நடுத்தர விவசாயிகள், பெரிதும் பயன் அடைய வேண்டும் என்பதே இந்த அரசின் நோக்கம்.

இவ்வாறு ஒரு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.
Editor: E. PARASURAMAN

# எதற்கெடுத்தாலும் அரசு மீது பழிபோடும் எதிர்க்கட்சிகள்: ராஜிவ்காந்தி கண்டனம்

கல்கத்தா, நவ. 2— எதற்கெடுத்தாலும் அரசு மீது குறை சொல்வது எதிர்க்கட்சிகளுக்கு வாடிக்கையாகி விட்டது என்று ராஜிவ்காந்தி கண்டனம் தெரிவித்தார்.

பிரதமர் இந்திரா காந்தியின் மகன் ராஜிவ் காந்தி கல்கத்தா விமான நிலையத்தில் நிருபர்களிடம் பேசினார்.

பம்பாயில் மில் தொழிலாளர் நடத்தும் வேலை நிறுத்தம் பற்றி நிருபர் ஒருவர் ராஜிவ்காந்தியிடம் கேட்டார்.

அதற்கு ராஜிவ் காந்தி பதில் அளித்தார். [illegible] வேலை நிறுத்தம் அரசு சம்பந்தப்பட்டது அல்ல.

அப்படி இருந்தும் கூட மாநில அரசு இதில் தலையிட்டு அதற்குத் தீர்வுகாண நடவடிக்கை எடுத்து வருகிறது.

இப்படிப்பட்ட பிரச்னைகளைத் தீர்க்க அரசு முன் வந்தால் அதைஅரசு தலையீடு என்று எதிர்க்கிறார்கள். கண்டனம் தெரிவிக்கிறார்கள்.

அரசு சம்பந்தப்படாமல் இருந்தால அரசு சும்மா இருப்பதாக குற்றஞ்சாட்டுகிறார்கள்.

இப்படி எதிர்க்கட்சியினர் அரசு மீது குற்றஞ் சாட்டுவதை வாடிக்கையாகக் கொண்டிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் அரசுகள் என்ன தான் செய்ய முடியும்.

இவ்வாறு ராஜிவ்காந்தி கூறினார்.

## போக்குவரத்து ஊழியர்கட்கு போனஸ்: அரசுக்கு நன்றி

சென்னை, நவ. 2— தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதிக் கழக ஊழியர்களுக்கு பலவித சூழ்நிலைகளுக்கிடையே 8.33 சதவிகித போனசுடன் 360 ரூபாயும் வழங்கியுள்ள அரசுக்கு தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவன ஊழியர் பணி மற்றும் நலச்சங்கம் நன்றி தெரிவித்துள்ளது.

போக்குவரத்து தொழிலாளர்களது முன்னேற்றத்திற்கு அல்லும் பகலும் சிந்தித்து செயல்வடிவம் தந்து வரும் செயல்திறன் மிக்க அமைச்சருக்கும் சிறப்புத் தலைவர் ஜெகத்ரட்சகன் எம்.எல்.ஏ. வுக்கும் இந்தச் சங்கத் தலைவர் த. அப்பாவு, செயலாளர் ஆர். பிரபாகரன் ஆகியோர் நன்றி தெரிவித்துள்ளனர்.

## முட்டை அளவு இருந்த சிறுநீரகக் கல்

ஆலப்புழை, நவ. 2— ஆலப்புழையில் உள்ள அரசினர் மருத்துவமனையில் ஒரு நோயாளியின் சிறுநீரகத்தில் முட்டை அளவு இருந்த சிறுநீரகக் கல் அறுவை சிகிச்சை மூலம் அகற்றப்பட்டது.

மருத்துவமனையின் தலைமை சர்ஜன் டாக்டர் எம். என். சோமன் இத்தகவலைத் தெரிவித்தார்.

# தொழிலாளரை தூண்டிவிட்டு கருணாநிதி விஷமம்

### வை. பெருமாள் கண்டனம்

**சென்னை. நவ. 2- விரக்தி அரசியல்வாதி கருணாநிதி, தொழிலாளர்களைத் தூண்டிவிடும் செயலில் இறங்கி இருக்கிறார் என்று வை. பெருமாள் கண்டனம் தெரிவித்தார்.**

அண்ணா தொழிற் சங்கப் பேரவைச் செயலாளர் வை. பெருமாள் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

புரட்சித் தலைவர் அரசுக்கு எதிராக அரசு ஊழியர்களைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கலாம் என்று கருணாநிதி கனவு காண்கிறார். அரசு ஊழியர்களுக்கு வரலாறு காணாத வகையில் ஒரே சமயத்தில் 4 கிராக்கிப் படிகளைத் தந்தவர் புரட்சித்தலைவர். மீண்டும் இப்போது கிராக்கிப்படி உயர்வு அளித்துள்ளார். நல்ல உள்ளம் படைத்த என்.ஜி.ஓ.க்கள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர்.

இதே அரசு ஊழியர்கள் கருணாநிதி ஆட்சியில் போராட்டம் நடத்திய போது கருணாநிதி என்ன சொன்னார்? "உங்களுக்கு சம்பள உயர்வு தருவதற்காக எந்தெந்த இனங்களில் வரி போட வேண்டும்? அவற்றை எழுதிக் கொடுங்கள். அதை பொதுமக்களிடம் கூறி அவர்கள் அனுமதித்தால் அதை ஏற்று சம்பள உயர்வு அறிவிக்கிறேன்" என்று கூறியவர்தான் கருணாநிதி.

### கருணாநிதியின் வேடிக்கைபேச்சு

ஆடு நனைகிறதேஎன்று ஓநாய் அழுவது போல கருணாநிதி பேசுவது வேடிக்கையாக இருக்கிறது.

விவசாயிகள் போராட்டம் நடத்தியபோது இரும்புக்கரம் கொண்டு அடக்குவேன் என்று மிரட்டியவர்தான் கருணாநிதி.

ஆசிரியர்கள் போராட்டம் நடத்திகைதானபோது மன்னிப்புக் கடிதம் எழுதி வாங்கிக் கொண்டு விடுவித்தவர் தான் கருணாநிதி.

இப்படிப்பட்ட கருணாநிதியிடம் அரசு ஊழியர்களும், தொழிலாளர்களும் ஏமாறமாட்டார்கள்.

தாயுள்ளத்துடன் பிரச்சினைகளை அணுகி சலுகைகள் வழங்கும் புரட்சித் தலைவரைப் பழிக்கும் கருணாநிதியின் உள் நோக்கத்தை அரசு ஊழியர்களும், தொழிலாளர்களும் புரிந்து கொள்வார்கள்.

இவ்வாறு வை. பெருமாள் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

# அகவிலைபடி உயர்வு அரசு ஊழியர் சங்கங்கள் நன்றி

**சென்னை. நவ. 2- அகவிலைப்படி உயர்வு வழங்கிய முதல்வர் புரட்சித் தலைவருக்கும் நிதியமைச்சர் நாவலருக்கும் அரசு ஊழியர் சங்கங்கள் நன்றி தெரிவித்துள்ளன.**

முதல்வர் புரட்சித் தலைவர், அரசு ஊழியர்களுக்கு அகவிலைப்படி உயர்வு அளித்திருக்கிறார். கழக அரசு அமைந்த பின்பு அளிக்கப்படும் 17-வது அகவிலைப்படி உயர்வு இது என்பது குறிப்பிடத்தக்கது.

அகவிலைப்படி உயர்வுக்காக நன்றி தெரிவித்து அரசு ஊழியர் சங்கங்கள் அறிக்கை விடுத்துள்ளன.

தலைமைச் செயலக பிரிவு அதிகாரிகள் சங்கத்தின் தலைவர் எஸ். என். ரங்கராஜன், செயலாளர் எம்.ஐ.ஜாக்கப் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் 1—10—82 முதல் அரசு ஊழியர்களுக்கு அகவிலைப்படி உயர்வு அளித்திருப்பதற்காக முதல்வருக்கும், நிதியமைச்சருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம் எனத் தெரிவித்துள்ளார்.

## குடிநீர், அண்ணா பணியாளர் சங்கம்

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரிய அண்ணா பணியாளர்கள் சங்கத்தின் மாநிலத் தலைவர் வை. பெருமாள், பொதுச்செயலாளர் பெ. ராசேந்திரன் ஆகியோர் விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறி இருப்பதாவது:

அரசு ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு அளித்த உத்தமத் தலைவர் முதல்வர் புரட்சித் தலைவருக்கும், நிதியமைச்சர் நாவலருக்கும் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரிய அண்ணா பணியாளர் சங்கத்தின் சார்பாக நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மேலும் அரசு ஊழியர்களுக்கு பலவித சலுகைகளை வழங்கி வரும் புரட்சித்தலைவர் அரசுக்கு எதிராக வேண்டாத போராட்டங்களை நடத்தி வரும் சிவ. இளங்கோவின் போக்கை எங்கள் சங்கம் வன்மையாகக் கண்டிக்கிறோம். சிவ. இளங்கோ நடத்தும் போராட்டத்திற்கு வாரிய ஊழியர்கள் எவரும் செவிசாய்க்க மாட்டார்கள்.

இவ்வாறு அவர்கள் கூறியுள்ளனர்.

செய்தி சேகரிக்க

## யானை மீது அமர்ந்து செல்ல இருக்கும் நிருபர்

திருவனந்தபுரம், நவ. 2— புதுடெல்லியில் நடக்க இருக்கும் ஆசிய விளையாட்டுப் போட்டியின் போது அதிசயமாக ஒரு நிருபர் யானை மீது அமர்ந்து சென்று செய்தி சேகரிக்கப் போகிறார்.

அந்த நிருபர் பெயர் முசாத்.

இவர் கேரள டைம்ஸ் என்ற மலையாள பத்திரிகையின் நிருபர். அலங்கரிக்கப்பட்டு முகபடாம் அணிந்த யானை மீது அமர்ந்து சென்று இவர் செய்தி சேகரிக்கப் போகிறார்.

கும்பகோணத்தில்

## 2 ஆயிரம் மூட்டை நெல் பறிமுதல்

கும்பகோணம், நவ.2- தஞ்சை மாவட்டம் சீர்காழி அருகே, ஒரு அரிசி மில்லில் கணக்கில் காட்டாமல் இருந்ததாக கூறப்படும் 2 ஆயிரம் நெல் மூட்டைகளை, சிவில் சப்ளை அதிகாரிகள் பறிமுதல்செய்தனர்.

எருக்கஞ்சேரியில்

## ஜேப்பியார் பேசுகிறார்

சென்னை, நவ. 2— சென்னை 1-வது வட்டம் எருக்கஞ்சேரியிலுள்ள மணவழகர் தெருவில் நாளை (3-ந் தேதி) இரவு 7 மணிக்கு கழகப் பொதுக்கூட்டமும் குடிசை மாற்று வாரிய உறுப்பினர் ஜம்புலி வடிவேலுக்கு பாராட்டுக் கூட்டமும் நடக்கிறது.

எஸ். பாண்டியன் தலைமையில் நடக்கும் இந்த விழாவிற்கு ஆ. கி. மூர்த்தி, ஆர்.ராஜா முன்னிலை வகிக்கின்றனர். பி. எம். தேவன், முத்து வரவேற்றுப் பேசுகின்றனர்.

சென்னை மாவட்டக் கழக செயலாளர் ஜேப்பியார் எம். எல். சி. மாவட்ட துணைச் செயலாளர் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, வண்ணை கோவிந்தன், பெரம்பூர் சாலமன், வே. மோகனசுந்தரம், அ.கி.மூர்த்தி, எல்.எஸ். மணி, எஸ். எஸ். மணி, ப.குப்புசாமி, க.புருடோத்தமன், ஆர். கேசவன் எம். மோகன் மற்றும் பலர் பேசுகின்றனர். ஜெ.இ. பென்னி நன்றி கூறுகிறார்.

கத்தியைக் காட்டி மிரட்டிய

# ஜேப்படி திருடனை மடக்கிப் பிடித்த பொதுமக்கள்

**சென்னை.நவ. 2- ஓடும்பஸ்சில் பயணியிடம் கத்தியைக்காட்டி மிரட்டி 'பிக்பாக்கெட்' அடித்த ஆசாமி ஒருவன் தடுப்புக்காவல் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டான்.**

இதுபற்றி போலீஸ் தரப்பில் கூறியதாவது:—

சென்னை விவேகானந்தர் இல்லத்திலிருந்து போரூருக்கு ஒரு பஸ் புறப்பட்டுச் சென்றது. அந்த பஸ்சில் பயணம் செய்த பயணியிடம் ஒருஆசாமி "பிக்பாக்கெட்" அடித்து விட்டு ஓடும் பஸ்சிலிருந்து இறங்கி தப்பி ஓட முயன்றான்.

உடனே பொது மக்கள் அவனைப்பிடிக்க முயன்ற போது கத்தியைக் காட்டி "யாராவது கிட்டே வந்தால் கத்தியால் குத்திக் கொன்று விடுவேன்" என்று மிரட்டினான். ஆனால் பொதுமக்கள் அவனுடன் கட்டிப் புரண்டு சண்டை போட்டு அவனைப் பிடித்தனர்.

### பொதுமக்களே பிடித்தனர்

மேலும் அவனிடமிருந்து 'பிக்பாக்கெட்' அடித்த ரூபாய் 100யும் கைப்பற்றினர்.

பிறகு அவனை ஐஸ் அவுஸ் காவல் நிலையத்திற்குக் கொண்டு சென்றனர்.

அங்கு போலீசார் அவனை விசாரித்தபோது அவன் பெயர் முனுசாமி [வயது-22] என்றும், இதற்கு முன்பு 4 முறை திருட்டுவழக்கில் கைதாகி சிறை சென்றதாகவும் தெரியவந்தது.

இதையொட்டி முனுசாமியை ஒரு வருடம் தடுப்பு காவல்சட்டத்தின் கீழ்ஜெயிலில்வைக்குமாறு சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் உத்தரவிட்டார்.

# தமிழக திட்டக்குழு உறுப்பினராக 12 நிபுணர் நியமனம்

**சென்னை, நவ. 2— தமிழக திட்டக்குழு உறுப்பினர்களாக 12 நிபுணர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.**

தமிழக திட்டக்குழு தலைவராக வி. கார்த்திகேயனும், துணைத் தலைவராக பாவலர் முத்துசாமியும் உள்ளனர். சமீபத்தில் நியமிக்கப்பட்டுள்ள டாக்டர் கே.வெங்கடசுப்பிரமணியம் முழு நேர உறுப்பினராக உள்ளார்.

பகுதி நேர உறுப்பினராக 12 பேர் நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் பெயர் வருமாறு:

பி.சிவராமன் (மத்திய திட்டக்குழு முன்னாள் உறுப்பினர்)

டாக்டர் வி.சி.குழந்தைசாமி (அண்ணா பல்கலைக்கழக துணை வேந்தர்).

டாக்டர் மு. அறம் (காந்தி கிராம பல்கலைக் கழக துணை வேந்தர்).

டாக்டர் எம். சாந்தப்பா (சென்னைப் பல்கலைக்கழக துணை வேந்தர்)

நா. மகாலிங்கம் (தொழில் அதிபர்).

திருமதி சரோஜினி வரதப்பன் (மத்திய சமூக நல வாரிய முன்னாள் தலைவர்)

ஏ. வெங்கட்ராமன் (விவசாய பல்கலைக்கழக துணை வேந்தர்).

டாக்டர் நாயுடம்மா (ஜவகர்லால்நேரு பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர்).

டாக்டர் பி.வி. இந்தர்சென் (சென்னை ஐ.ஐ.டி. இயக்குனர்).

டாக்டர் எம். நாராயணன் (மருத்துவக் கல்வி முன்னாள் இயக்குனர்)

டாக்டர் ராஜம்மாள் தேவதாஸ் (கோவை அவினாசிலிங்கம் பெண்கள் கல்லூரியின் பட்ட மேற்படிப்பு துறை தலைவர்.)

டி. வி. அந்தோணி (திட்ட மற்றும் வளர்ச்சித் துறை கமிஷனர் மற்றும் செயலாளர்)

நவம்பர் 1 முதல் ஓராண்டுகாலம் இவர்களது பதவிக்காலம் இருக்கும்.

இதன் செயலாளராகவும் மற்றும் உறுப்பினராகவும் டி. பி. நாகராஜன் இருப்பார்.

நினைத்தது ஒன்று நடந்தது ஒன்று

## விவாகரத்து கோருகிறார் விமானம் கடத்தியவன் மனைவி

கொழும்பு, நவ. 2— இத்தாலிய விமானத்தைக் கடத்தி 3 லட்சம் டாலர் பிணைப்பணத்தை இலங்கையைச் சேர்ந்த ஏகநாயகா பெற்றது தெரிந்ததே.

இத்தாலியில் உள்ள தனது மனைவி குழந்தைகளுடன் சென்று வாழ அனுமதிக்க வேண்டும் என்பது ஏகநாயகாவின் முக்கிய கோரிக்கையாகும்.

ஆனால் ஏகநாயகாவின் இத்தாலிய மனைவி, தற்போது விவாகரத்து கோரி கோர்ட்டில் மனுத்தாக்கல் செய்துள்ளார்.

அமைச்சர் கே. ஏ. கே. பெருமிதம்

# கழக அரசில் பால் வளத்துறை பெறும் புது வேகம்

**சென்னை, நவ 2— கழக அரசில் தமிழக பால்வளத் துறை புதிய வேகம் பெற்றுள்ளது என்று அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.**

மாதவரம் பால் பண்ணை அருகே 22 லட்சம் ரூபாய் செலவில் புதிதாக கட்டப்பட்டுள்ள ஆவின் நிர்வாக அலுவலகக் கட்டிடத் திறப்புவிழா நேற்று நடந்தது.

இந்த விழாவில் கலந்து கொண்டு கட்டிடத்தை திறந்துவைத்துப் பேசுகையில் அமைச்சர்கே.ஏ.கே. கூறியதாவது:—

1962-ம் ஆண்டு துவங்கிய இந்த முயற்சி, பல்கிப் பெருகி பல்லாயிரக்கணக்கான விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் தொழிலாக விளங்குகிறது.

இதுவரை பால் பெருக்குத் திட்டங்கள் இரண்டை கண்டுள்ளோம். முதல் பால் பெருக்குத் திட்டத்தின் விளைவால் பெரியார் மாவட்டம், அம்பத்தூர் ஆகிய இடங்களில் பால் பண்ணை உருவாக்கப்பட்டது. 2-வது கட்டத்தில் தமிழகத்தின் பெரு நகரங்களில் எல்லாம் பால் பண்ணை உருவாக்கப்படுகிறது.

முதல்திட்டத்தை ரூ.15 கோடி செலவில் செய்தோம். இரண்டாவது பால் பெருக்கு திட்டம் 42கோடி ரூபாய் செலவில் நிறைவேற்றப்படுகிறது.

### விவசாயிகளின் சொத்து

இந்தக் கூட்டுறவு இணையத்தில் உறுப்பினர்களாக இருக்கும் 3 லட்சம் விவசாயிகளின் திறமையைப் பொறுத்து இதன் வெற்றி அமையும்.

இங்கே திறக்கப்பட்டுள்ள இந்த புதிய கட்டிடம் 3 லட்சம் விவசாயிகளின் ஆத்மாவாக உள்ளது. 3 லட்சம் விவசாயிகளின் சொத்து இது. அவர்களால் தான் இந்த இணையம் நடத்தப்படுகிறது. நாங்கள் அவர்களின் தூதுவர்களாக இருந்து செயல்படுகிறோம்.

பால் உற்பத்தி செய்யும் விவசாயிகள் நலனையும், நுகர்வோர் நலனையும் இரண்டு கண்களைப் போலப் பாதுகாக்கும் முயற்சியில் நாங்கள் ஈடுபட்டு வருகிறோம்.

பால் வளத்துறையில் இப்போது ஒரு புதிய வேகம் ஏற்பட்டுள்ளது. மாவட்டங்களில் பணி செய்யும் பால் உற்பத்தியாளர் கூட்டுறவு ஒன்றிய பெருந்தலைவர்களான வி.ராஜகோபால், சேலம் கண்ணன், செங்கோட்டையன், பாலகுரு பாலாஜி ஆகியோர் சிறந்த முறையில் பணி புரிந்து வருகின்றனர். பால் வளத்தை பெருக்குவதில் இவர்கள் ஆர்வம் காட்டுகின்றனர்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. பேசினார்.

### திரவியம்

விழாவிற்கு தலைமை வகித்துப் பேசுகையில் தலைமைச் செயலாளர் திரவியம் கூறியதாவது:-

பொது மக்களுடன் தொடர்பு கொண்டு செயல்படும் இந்த நிறுவன ஊழியர்கள் மக்களுக்கு நல்ல முறையில் பணிசெய்ய வேண்டும்.

பால் உற்பத்தி செய்வோருக்கு கூடுதல் விலை தரும் போதெல்லாம் அதனால் நுகர்வோர் பாதிக்கப் படாமல் விலை ஏற்றத்தின் ஒரு பகுதியை அரசே ஏற்று மானியம் தர வேண்டும் என்று முதல்வர் கூறியிருக்கிறார். அந்த வகையில் இந்த நிறுவனத்திற்கு அந்த சமயங்களில் மானியம் வழங்கப்படுகிறது.

விலை யேற்றத்தால் நுகர்வோர் பாதிக்கக் கூடாது என்ற எண்ணத்தில் இந்த அரசு மானியம் வழங்கி வருகிறது.

இவ்வாறு தலைமைச் செயலாளர் திரவியம் பேசினார்.

### நிதி உதவி

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்துக்கு ஆவின் அலுவலர்கள், ஊழியர்கள் ஆகியோர் தங்களின் ஒருநாள் ஊதியத்தை நன்கொடையாக அளித்துள்ளனர். இதற்கான 30 ஆயிரத்து 26 ரூபாயை ஆவின் நிர்வாக இயக்குனர் சுவாமிநாதன் அமைச்சர் கே.ஏ.கே.யிடம் வழங்கினார். இந்திரா காந்தி நற்பணி மன்றத்தின் சார்பில் 101 ரூபாய் வழங்கப்பட்டது.

### விழாவிவரம்

காந்திகாமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன் எம்.எல்.ஏ., ஜே.சி.டி. பிரபாகரன் எம்.எல்.ஏ. பெரியார் மாவட்ட பால் உற்பத்தியாளர் கூட்டுறவு ஒன்றிய பெருந்தலைவர் கே. ஏ. செங்கோட்டையன் எம்.எல்.ஏ, சென்னை செங்கற்பட்டு ஒன்றிய பெருந்தலைவர் பாலாஜி, சேலம் ஒன்றிய பெருந்தலைவர் பி. கண்ணன், தருமபுரி மாவட்ட ஒன்றிய பெருந்தலைவர் வி. ராஜகோபால், மதுரை மாவட்ட ஒன்றிய பெருந்தலைவர் வெ. பாலகுரு ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

ஆவின் இல்ல இதழை விவசாயத்துறை செயலாளர் செல்வி எம். எஸ். ரமேஷ் வெளியிட்டார். முதல் பிரதியை தேசிய பால் வள வாரிய அலுவலர் ஜானகிராமன் பெற்றுக் கொண்டார்.

விழாவிற்கு வந்த அனைவரையும் பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு இணைய நிர்வாக இயக்குநர் ஏ.எம்.சுவாமிநாதன் வரவேற்றார். ஜெகதீசன் நன்றி கூறினார்.